# அஷ்டாவக்ர கீதை



சுவாமி பிரபஞ்சநாதன்

# நூல் விளக்கம்


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | அஷ்டாவக்ர கீதை |
| தொகுப்பு | : | சுவாமி பிரபஞ்சநாதன் |
| மொழி | : | தமிழ் |
| வகை | : | தன்னாட்டம் |
| முதல் பதிப்பு | : | 2018 |
| நூலின் அளவு | : | டெம்மி |
| பக்கங்கள் | : | 31 |
| தாள் | : | A5 (5.83” X 8.27”) |
| எழுத்து அளவு | : | 12 புள்ளிகள் |
| உரிமை | : | அனைவருக்கும் |
| கட்டமைப்பு | : | சாதா பைண்டு அட்டை |
| கணினி அச்சு | : | ஓம் கிராபிக்ஸ் |
| விலை | : | அக விழிப்பு |

# அஷ்டாவக்ர கீதை

## அத்தியாயம் - 1

### ஜனகர்:

1. ஸ்வாமி! ஞானத்தையும், முக்தியையும், ஆசையில்லாத் தன்மையையும் எவ்வாறு பெறுவது? இதைத் தங்களது கிருபையினால் எனக்கு அருளல் வேண்டும்.

### அஷ்டாவக்ரர்:

2. அன்பா! முக்தி என்ற விடுதலையை நீ விரும்புவாயானால், உலக விஷயங்களை நஞ்சு போன்று ஒதுக்கித் தள்ளிவிடு. இத்துடன் பொறுமை, நேர்மை, வாய்மை, கருணை, மற்றும் திருப்தி போன்றவைகளை அமுதம் போன்று ஏற்றுக் கொண்டு நடைமுறையில் கடைப்பிடிப்பாயாக.

3. மண், நீர், நெருப்பு, காற்று மற்றும் ஆகாயம் போன்ற ஐந்து பூதங்களும் நீ அல்ல. முக்தி

உனக்கு வேண்டுமானால், இவற்றின் சாட்சியான ஆன்மாவே நீ என்பதை நன்கு புரிந்துக் கொள்.

4. அழிகின்ற உடலை உண்மையென்று கருதாமல் ஒதுக்கி, என்றும் அழியாத, நித்யமான ஆன்மாவே நீ என்ற அறிவினிலே அறிந்து, அமைதியாக உன் சொரூபத்தில் நிலைப் பெற்று நின்றாயானால், அந்த வினாடியிலேயே நீ சுகமும், சாந்தியும், சந்தோஷமும் கூடிய ஜீவன் முக்தியையும் பெற்றவனாவாய்.

5. அந்தணர், புலையன் போன்ற ஜாதி பேதங்கள் எல்லாம் உனக்கு கிடையாது!, பிரம்மச்சரியம், இல்லறம், வானப்பிரஸ்தம், சன்னியாசம் என்ற ஆசிரமங்களும் உனக்கு கிடையவே கிடையாது. இந்த பேதங்கள் எல்லாம் உடலுக்கே அன்றி ஆன்மாவாகிய உனக்கு கிடையாது.

6. உடலில் உள்ள ஐந்து புலன்களைக் கொண்டு, உடலோடு உன்னை அடையாளப்படுத்திக் கொண்டு, அதுப் போன்றே மற்ற பரு உடல்கள் போன்று காணப்படக் கூடியவன் நீ அல்ல. நீ எதையும் பற்றாத, உருவம் இல்லாத எங்கும், எப்பொழுதும், எல்லாவற்றிற்கும் சாட்சியாக இருக்கின்ற அந்த ஆன்மாவே நீ என்பதை உணர்ந்து கொண்டு சுகமாயிரு!

7. மனதினால் உண்டாகின்ற சுக, துக்கங்களும், தர்ம, அதர்மங்களும் உனக்கில்லை. அவைகள் எல்லாமே மனதின் கற்பிதமே! மேலும், செயல் செய்பவனும், அதை அனுபவிப்பவனும் நீ

இல்லை. உத்தமனே! நீ என்றும் இருக்கின்ற, இவைகளுக்கு அப்பாற்பட்ட விடுதலையுற்றவன்.

8. அனைத்திற்கும் ஒரே சாட்சியாக இருப்பவன் நீ!. நித்திய விடுதலை பெற்ற நிறைவானவன் நீ!. மனதின் கற்பிதத்தினால், இருமைகள் உண்டாகி, காண்பவனை உனக்கு அன்னியமாகக் காண்பதே உனது பந்தம்.

9. அனைத்தையும் செய்பவன் "நான்" என்ற அஹங்காரத்தினால் ஆட்பட்டு, மனதின் கலவரத்தினால், பலவற்றையும் கற்பிதம் செய்துக் கொண்டு, துயரப்பட்டுக் கொண்டு இருக்கின்றாய். உண்மையில் செயல்கள் எதுவும் செய்பவன் நானல்ல என்ற நம்பிக்கை அமுதினை அருந்தி இன்பமுடன் இருப்பாயாக!.

10. எண்ணங்கள் ஏதுமற்ற, சுத்த அறிவாகிய தூய ஞானம் ஒன்றே "நான்" என்ற, நிச்சய நெருப்பினால், 'அறியாமை' என்றப் பெருவனத்தை எரித்து துயரமற்று இரு!.

11. காரிருளில் கயிறு பாம்பு போன்று காணப்படுவதால், அச்சம் உண்டாகின்றது, அதுவே, வந்த வெளிச்சத்தினால் கயிற்றை பாம்பல்ல என்று எப்படி அறிந்து அச்சம் நீங்கினாயோ, அவ்வாறே, பிரகாஷம் பொருந்திய ஞான ஒளியாகிய தூய அறிவே நீ! என்பதை அறிந்து, ஆனந்தமாய் இருப்பாயாக!.

12. தன்னை முக்தன் என கருதுபவன் முக்தன். பக்தன் என கருதுபவன் பக்தன். அதுப்போன்று, உன்னுடைய மதி எதுவோ, கதி அதுவே! என்ற பழமொழி உண்மையாம்.

13. ஆன்மா ஒன்றே, அது சாஷியாகவே இருக்கும், பூரணமானது, எதிலும் பந்தப்படாதது, உருவமற்றது, செயலற்றது, பற்றற்றது, ஆசைகளற்றது, மற்றும் அமைதி மயமானது.

14. அறிவு வெளி நானென்றும், ஆசைகள் ஏதுமற்ற, உள்ளே, வெளியே என்ற இருமைகள் ஏதுமற்ற, பாவனைகளற்ற, சஞ்சலமற்றவனாகத் தன்னையே கருதுவாயாக.

15. இந்த உடல் உண்மை என்ற நம்பிக்கை கயிற்றினால் வெகுகாலம் கட்டப்பட்டுள்ளாய், ஆன்ம அறிவே நானென்ற வாளினால், அந்த கயிற்றை துணிந்து வெட்டி விடுதலை அடைந்து, சுகமாக வாழ்வாயாக!.

16. பற்றற்ற, பணியற்ற, மாசற்ற சுயம்பிரகாசனே நீ!, அதை அறியாமல், உடலை உண்மை என்று கருதி சமாதி பழகுகின்றாயே அதுவே நின் பந்தம்!.

17. இந்தப் படைப்பனைத்தும் உன்னால் மட்டுமே வியாபிக்கப்பட்டுள்ளது, உன்னுள்ளேயே திகழ்வது!. உனக்கு வேறாக ஒன்றுமே இல்லாத தூய ஞான வடிவே நீ! எனவே, உன்னை நீ அற்பமாக எண்ணாதே!.

18. எதனையும் எதிர்பாராமல், ஏற்றி வைத்துக் கொண்டுள்ள, தேவையற்ற பதிவுகளை ஆழ் மனதிலிருந்து நீக்கி, பற்றற்று, அஹம் குளிர்ந்து, ஆழ்ந்த புத்தியுடன் குழப்பமடையாமல், உன் சொரூபமாகிய ஆன்ம ஞானத்திலேயே எப்பொழுதும் நிலைப்பெற்றிருப்பாயாக.

19. காண்கின்ற உருவக்காட்சிகளெல்லாம் உண்மையில்லை, இவைகள் அனைத்தும் மாறிக் கொண்டே இருக்கின்ற மனதின் கற்பிதமே!, உருவமற்றவை மட்டுமே மாறாதது என்ற உண்மையை உணர்ந்தாயானால் இனி உனக்குப் பிறப்பில்லை.

20. கண்ணாடிப் பெட்டிக்குள் இருக்கின்ற பொருளை. அந்த பெட்டிக்கு உள்ளே பார்த்தாலும், வெளியே பார்த்தாலும் ஒன்றே, அதுப்போல இந்த உடலின் உள்ளே பார்த்தாலும், வெளியே பார்த்தாலும் எல்லாம் ஒன்றேயான அந்த பரமான்மனே!.

21. மண்பானைக்குள்ளே இருக்கின்ற ஆகாசமும், வெளியே எங்கும் பரந்து இருக்கின்ற ஆகாசமும் ஒன்றுதானே! அதுபோல, இந்த சிருஷ்டி எங்கும் அணுத்துகள்களாய் நம்முள்ளேயும், வெளியேயும் நிறைந்து இருப்பது அந்த சாசுவதப் பரப்பிரஹ்மமே!.

முதலாம் அத்தியாயம் முற்றிற்று.

# அத்தியாயம் - 2

குரு உபதேசத்தினால், தெளிவை அடைந்த ஜனகர் தமது நிலையையும், மகிழ்ச்சியையும் இந்த அத்தியாயத்தின் வாயிலாக வெளிப்படுத்துகின்றார்.

## ஜனகர்:

1. நான் இப்பொழுது மாசற்ற அமைதி மயமான, உணர்வு நிலைக்கு அப்பால் விழிப்புற்று இருக்கின்றேன்! இத்தனை காலமும் அறியாமையாகிய மாயையின் மயக்கத்தால் நான் ஏமாற்றப்பட்டுக் கொண்டிருந்தேன்!

2. ஆன்ம ஒளி ஒன்றினால் மட்டுமே இந்த உடலும், உலகமும் ஒளிர்விப்பது போல, நானே எல்லாமுமாகவும், இல்லாமையாகவும் இருக்கின்றேன். இல்லாத இந்த உடலையும், உலகையும் மாயை என்று நீக்கினாலேயே, பரம்பொருள் எனக்கு அறியப்படுகின்றது.

3. கடல் அலைகளும், நுரை குமிழிகளும் கடல் நீரிலிருந்து வேறல்ல! என்பதைப் போல, ஆன்ம வெளிப்பாடாகிய இந்த உலகம் ஆன்மாவிலிருந்து வேறல்ல!

4. நெய்யப்பட்ட ஆடையை நன்கு கவனித்து நோக்கினால், அவைகள் வெறும் இழைகள் (நூல்கள்) மாத்திரமே! அதுப்போல, இந்த

படைப்பையும் நன்கு கவனித்து விசாரித்து நோக்கினால் அவைகள் ஆன்மாவிலிருந்து வேறல்ல!.

5. கரும்புச்சாற்றிலே உண்டான சர்க்கரை எவ்வாறு இனிப்பிலிருந்து வேறல்லவோ, அவ்வாறே, என்னிடம் உண்டான இந்த உலகம் என்னிலிருந்து வேறல்லவே.

6. கயிற்றை கண்டால் பாம்பு அங்கு இல்லை!, பாம்பை கண்டால், கயிறு அங்கு இல்லை! அதுபோல, தன்னை (ஆன்மாவாகிய தன் சொரூபத்தை) கண்டால், உலகம் அங்கில்லை! அறியாமையினால் இந்த உலகத்தை உண்மை என்று கண்டால், ஆன்மாவாகிய தன் சொரூபம் அங்கே இல்லாமல் மறைக்கப்படுகின்றது.

7. என்னுடைய சுயவடிவம் ஒளியேயன்றி வேறன்று, உலகம் ஒளிர்வது உண்மையில் ஆன்மனாகிய என் இருப்பினாலேதான் என்பது நன்கு தெரிகின்றது!

8. கிளிஞ்சலை வெள்ளியென்றும், கயிற்றை பாம்பென்றும், வெயிலில் கானல் நீரென்றும் அறியாமையால் நினைத்தது போன்று, இந்த உலகம் இருப்பது போன்று, அறியாமையினால் நினைப்பது ஆன்மாவை அறிய முடியாமல் மறைக்கின்றது.

9. மண்ணினால் செய்யப்பட்ட மண்குடம், பொன்னினால் செய்யப்பட்ட நகைகள் மற்றும்

கடல் நீரினால் உண்டான அலைகளும் என அவையவைகள் அவை அவைகளிலேயே ஒடுங்குவதுபோன்று, என்னிடமிருந்து வெளிப்பட்ட இந்த உலகு, என்னிடமே ஒடுங்குகின்றது.

10. சாதாரண புழு முதல் நான்முக பிரம்மா வரை கடைசி இதழாக அழிந்தாலும், போற்றுதலுக்கும் அப்பால், அழிவற்ற நானே வியப்புக்குறிய ஒன்றாய் என்றும் இருக்கின்றேன்.

11. உண்மையில் நான் வியப்புக்குரியவனாக, எனக்கு நானே நமஸ்கரிப்பவனாக, ஒன்றாக ஓர் உருவத்தோடு இருந்த போதிலும், நான் வருவதுமில்லை, போவதுமில்லை, ஒரே நேரத்தில் எங்கும் நிறைந்திருக்கின்றேன்.

12. எந்த வடிவத்திற்கும் உட்படாமல், எதையும் தொடாமலேயே தொன்றுதொட்டு இந்த பிரபஞ்சத்தில் பரவி இருக்கும் எனக்கு நிகர் நானே! என்னையே நான் வணங்குகின்றேனே!

13. என்னையே நான் வணங்குகின்றேன்! ஒன்றும் எனக்கு இல்லை, அதேசமயம் வியப்புக்குறிய எண்ணம் அல்லது பேச்சு என எல்லாமாகவும் நானே இருக்கின்றேன். வணங்குவதற்கு எனக்கு வேறாக எந்தப் பொருளும் இல்லாததினாலே என்னையே நான் வணங்குகின்றேன்!.

14. அறிவு, அறியப்படும் பொருள், அறிபவன் என்ற இம் மூன்றும் உண்மையில்லை, அறியாமையால்

உள்ள இம் மூன்றும், ஒன்றாய் என்னிடத்தில் விளங்குமோ அவனே நானாகிய ஆன்மன்.

15. ஒன்றைக் காண்பதும், பலவற்றை நினைப்பதும், மனதின் கற்பிதத்திற்குரிய துன்பத்திற்கு காரணம், காண்பதொன்றும் உண்மையில் அங்கில்லை என்பதை உணர்ந்தால் துயரில்லை. ஒன்றேயான தூய ஞான ரஸமே 'நான்' என்பதில் எந்தவித சந்தேகமுமில்லை.

16. ஞானம் மாத்திரமே நான்! அறியாமையினால் இந்த உடலென்ற உபாதிக்குள் சிக்கிக்கொண்டு, கற்பனையில் வாழுகின்ற, மனதிற்கு அப்பாற்பட்ட எல்லையற்ற பேரறிவு நான்!

17. பந்தமும் எனக்கில்லை, மோக்ஷமும் எனக்கில்லை, உண்மையில் நான் படைப்பை உட்கொண்டிருந்த போதிலும், உண்மையில் நானே ஏகமாய் இருப்பதால், குழப்பத்திற்கும் இடமில்லை.

18. வடிவமும், சாரமும் அற்ற இந்தப் பிரபஞ்சமும், என்னுடைய இந்த உடலும் உண்மையென்று உறுதியாய் நம்பிக்கொண்டிருந்தேன், தூய ஆன்மனே அறிவுமயமென்று விழிப்புற்று என்னை வெளிப்படுத்திக் கொண்டிருக்கின்றேன். இனி கற்பனைக்கு இடமே இல்லை!.

19. சொர்கம், நரகம், பந்தம், விடுதலை, பயம் என்ற கற்பனைகளினால் உண்டானதே இந்த உடலும், உலகமும் என கற்பனைகளினால்

மனம் மயங்குகின்றது, உண்மையில் அறிவு மயமான ஞானான்மாவான எனக்கும் இதற்கும் எந்த சம்பந்தமுமில்லை!.

20. பல்லுயிறும் வாழும் சோலையானாலும், யாருமற்ற பாலைவனமானாலும் நான் வேறுபடுத்தி அல்லது தனிமைப்படுத்தி பார்க்காத பரமான்மனே யான்!

21. நான் உடலல்ல, உண்மையில் நான் உடலைப் பெற்றிருக்கவில்லை, நான் பேரறிவு! என்னுடைய வாழ்க்கைத் தாகம் வெளித் தோற்றத்தோடு என்னைக் கட்டுப்படுத்துகின்றது.

22. எல்லையற்ற பெருங்கடலேயான என்னிடம், மனதினால் தோன்றும் காற்று எண்ணற்ற எண்ண அலைகளை கொந்தளிக்கச் செய்கின்றது.

23. எல்லையற்ற பெருங்கடலின் காற்று அடங்கி அமைதியாகும் பொழுது, ஜீவனான உயிர்களைக் சுமந்து வந்த பிரபஞ்சம் என்ற கப்பல், பெருங் கடலாகிய என்னால் விழுங்கப்பட்டிருக்கும்.

24. இது எத்தனை வியப்பாய் இருக்கின்றது! நானேயாகிய இந்த எல்லையற்ற பெருங்கடலில் உயிர் அலைகள் உண்டாகி கடுமையாக மோதி, சிறு பொழுது விளையாடி பிறகு மறைந்து போகின்றன.

## இரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

## அத்தியாயம் - 3

ஜனகரின் ஆன்ம முன்னேற்றத்தைக் கண்டு அஷ்டாவக்ரர் மிகவும் மகிழ்ச்சியடைந்தார். ஆனால், ஜனகரின் புரிதலின் போதாமையை அறிகின்றார். உலக இன்பங்களில் இருந்து விலகி இருப்பது பற்றிய, எதிர்ப்புச் செய்யுள்களின் ஒளிச்சுடர்களை உற்சாகத்தோடு தொகுத்துரைக்கிறார்.

## அஷ்டாவக்ரர்:

1. அழிவில்லாத உன்னை ஒன்றென்று உணர்வாய், ஆன்ம ஞானியும், தீரனுமான உனக்கு பொருள் சம்பாதிப்பதில் விருப்பம் எவ்வாறு உண்டாகும்?.

2. சிப்பி என்று அறியாததினால், அதன் மீது ஏற்றி வைக்கப்பட்டுள்ள வெள்ளித் தோற்றத்தில் ஆசை உண்டாவதுப் போல, ஆன்மாவை அறியாததினால், மனதின் மோகத்தினால், காணும் பல்வேறு விஷய சுகங்களில் ஆசை உண்டாகின்றது.

3. கடலில் அலைகள் உண்டாகி, அது எழுவதும், வீழ்வதுமாக இருக்கும், அதுபோன்று, ஆன்மா என்று அறிந்த பிறகும், மனதின் வாயிலாக எழுகின்ற, விழுகின்ற குழப்பத்தில் ஏன் நீ மயங்குகின்றாய்?

4. அழகான தூய அறிவாக, உன்னை நீ அறிந்துக் கொண்ட பிறகு, வீணான சிற்றின்பத்தில் இந்த

மனதையும், உடலையும் அடிமைப்படுத்திக் கொள்ள உன்னால் எப்படி முடியும்?

5. படைப்பனைத்திலும் தன்னையும், தன்னில் படைப்பனைத்தையும் காணுகின்ற ஞானிக்கு என்னுடையது என்ற எண்ணம் என்றுமே தோன்றாது!

6. ஒன்றேயான அத்வைத உயர் நிலையை நாடும் தீவிர முமுக்ஷுவுக்கு, பல்வேறு எண்ணங்களால் ஆட்கொள்ளப்பட்டு, அவைகளினால் ஆசை வயப்பட்டு சீரழிதல் என்பது சாத்தியமில்லை!

7. சாவை நெருங்கிக்கொண்டிருக்கும் ஒருவர் மரணத்தருவாயில் புலன் இன்பத்தில் நாட்டம் கொள்வது எப்படி மடமையோ அதுபோல, அறிவுக்கு முரணான ஆசையை ஒருவர் விரும்புவதும் விந்தையிலும் விந்தையே!

8. எது நிலையானது, எது நிலையற்றது என்பதை பிரித்தறிய தெரிந்த, இவ்வுலகம் மற்றும் மேலுலகம் பற்றிய தொடர்பற்று வாழத்தெரிந்த ஞானிக்கு, இந்த உடலின் அழிவில் அச்சம் கொள்வது என்பது கிடையாது.

9. தன்னை உபசரித்தாலும், உதாசீனப்படுத்தினாலும் தூய ஞானி தன்னில் ஒன்றுபட்டு தன் ஆன்மாவையே என்றும் காண்பதினால் மகிழ்ச்சியும், கோபமும் கொள்ளமாட்டார்.

10. தன்னுடைய உடலையும் பிரிதொருவரின் உடல் போல பாவிக்கும் பெருந்தகையான ஞானிக்கு புகழ்ச்சியிலும், இகழ்ச்சியிலும் மகிழ்ச்சியோ, மன வேதனையோ சிறிதும் கிடையாது.

11. இந்தப் பிரபஞ்சத்தையே மாயை எனக்காணும் நன்மதி உடையவனான ஞானி ஆசைகள் அனைத்தையும் விட்டொழித்த மனம் படைத்தவன் ஆதலால், அவன் சாவைப்பற்றிய எண்ணத்தினால், எப்படி அச்சம் கொண்டிருக்க முடியும்?

12. தன்னை அறிதலில் நிறைவும், ஆசைகளில் விருப்பமின்மையும் கொண்ட ஒரு மஹாத்மாவை யாரோடு ஒப்பீடு செய்ய இயலும்?

13. தன் இயல்பினாலேயே தோன்றும் இவைகளெல்லாம் ஒன்றுமில்லை என்பதை உணர்ந்த, உண்மையில் நிலைபெற்ற ஞானி இது வேண்டும் அல்லது இது வேண்டாம் என்ற இருமைகளில் இருந்து, பிரித்து பார்க்க முடியாது.

14. விருப்பு, வெறுப்பு போன்ற இருமைகளாலும், பற்று மற்றும் அகத்தழுக்கு போன்றவைகளாலும் பாதிக்காத அனுபவங்களை கொண்ட ஞானி ஒருவனால் மட்டுமே துன்பத்தையும், மகிழ்ச்சியையும் சமமாகப் பார்க்க முடியும்.

மூன்றாம் அத்தியாயம் முற்றிற்று.

# அத்தியாயம் - 4

## ஜனகர்:

1. உலக விஷயங்களில் விளையாடுகின்ற தீரனான ஆன்ம ஞானியை, சம்ஸார பந்தத்தை சுமக்கும் பாமரருடன் ஒப்பிடுதல் கூடாது. அது தவறு!

2. இந்திரன் முதலான தேவர்கள் யாவரும் தீனர்களாக, எந்நிலையை அடைய ஆர்வம் கொள்வார்களோ, அந்நிலையை அடைந்த யோகி உண்மையில் அதனால் செருக்கற்று இருக்கின்றார்.

3. புகை மூட்டத்தால் தீண்டப்படாத வானத்தைப் போல, தன்னை உறுதியாய் அறிந்த ஞானி நல்லொழுக்கம் அல்லது தீயஒழுக்கங்களால் தீண்டப்படுவதில்லை.

4. இந்த உலகம் அனைத்தும் ஆன்மாவேயென சுதந்திரமாய் வாழும் மஹாத்மாவைத் தடைச் செய்யத் தக்கோன் எவன்?

5. புல்லின் நுனி முதல் தொடங்கி பிரம்மன் வரையிலான நால்வகை படைப்புக் கூட்டத்தில் வேண்டல், வெறுத்தல்களைத் துறந்துவிடும் திறன் ஞானி ஒருவனுக்கே சாத்தியம் ஆகும்.

6. உலகின் இறையாம் இரண்டற்ற ஒன்றேயான பொருளே தானென்று எவன் ஒருவன் உணர்கின்றானோ, அவனே எதனிடமும் பயமின்றி, அவன் சித்தம் போல சஞ்சரிப்பான்.

நான்காம் அத்தியாயம் முற்றிற்று.

## அத்தியாயம் - 5

### அஷ்டாவக்ரர்:

1. நீ தூயவனாக இருக்கின்றாய், எதொன்றாலும் தீண்டப்படாமல் இருக்கின்றாய். துறப்பதற்கு என்று என்ன இருக்கின்றது? ஏற்கனவே ஏற்றி வைத்துக் கொண்ட எண்ணங்களினால் உண்டான மனதைக் கரைத்து, காட்சிகள் மறைந்தால், கரைந்து போதலின் அமைதியை நீ அறிவாய்.

2. கடல் நீருலிருந்து எழும் நுரைக்குமிழிகள் போன்று இந்த பிரபஞ்சம் உன்னிடமிருந்து (மனதிடமிருந்து) எழுகின்றது. உன்னை நீ ஒன்றேயான தூய ஆன்மா என்று அறிந்து, அதன் அமைதியிலே கரைந்து உட் செல்வாய்.

3. கயிற்றை பாம்பு போல தோற்றுவிக்கும் மனபிரம்மை எப்படியோ, அதுபோல இந்தப் பிரபஞ்சம் வெளிப்படையாகக் கண்முன்

தோன்றினும், தூய ஆன்மா நீ என்றறிந்து, அமலனாம் உன்னிடம் உலகில்லை என்று இவ்வாறே நீ கரைந்து போ!.

4. இன்பத்திலும் துன்பத்திலும், நம்பிக்கையிலும் ஏமாற்றத்திலும், வாழ்விலும் சாவிலும், நீ மாறாதவன், குறைபாடற்றவன் சமனாய், பூரணனாய் கரைந்து போதலின் நிலை இதுவே.

ஐந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

## அத்தியாயம் - 6

### ஜனகர்:

1. நான் எல்லையற்ற வானம். இந்தப் பிரபஞ்சம் ஒரு குடுவை என்றறிவதே ஞானம். ஆதலினால் இதை புகழ்வதோ, ஏற்றுக்கொள்வதோ, தள்ளுவதோ அல்லது அழிப்பதோ அவசியம் இல்லை.

2. மஹா சமுத்திரம் போன்றவன் நான். இந்தப் பிரபஞ்சம் அலைகள் போன்றது என்றறிவதே ஞானம். ஆதலினால் இதை புகழ்வதோ, ஏற்றுக்

கொள்வதோ, தள்ளுவதோ அல்லது அழிப்பதோ அவசியம் இல்லை.

3. நான் முத்துச்சிப்பி போன்றவன். இந்தப் பிரபஞ்சம் வெள்ளியின் பொய்த்தோற்றம் என்றறிவதே ஞானம். ஆதலினால் இதை புகழ்வதோ, ஏற்றுக்கொள்வதோ, தள்ளுவதோ அல்லது அழிப்பதோ அவசியம் இல்லை.

4. இந்த அகிலப் படைப்பு அனைத்தும் நானே. அனைத்து உயிர்களிலும் நானே இருக்கின்றேன். அனைத்து உயிர்களும் என்னில் இருக்கின்றன என்றறிவதே ஞானம். ஆதலினால் இதை புகழ்வதோ, ஏற்றுக்கொள்வதோ, தள்ளுவதோ அல்லது அழிப்பதோ அவசியம் இல்லை.

ஆறாம் அத்தியாயம் முற்றிற்று.

## அத்தியாயம் - 7

### ஜனகர்:

1. எல்லையிலா பெருங்கடலான என்னிடம் இந்த பிரபஞ்சம் என்ற கப்பல் மனம் என்ற காற்றினால் அங்குமிங்கும் அலைக்கழிக்கப்

படுகின்றது. இதனால் எனக்கொன்றும் வருத்தமில்லை.

2. எல்லையிலா பெருங்கடலான என்னிடம் இந்த பிரபஞ்சத்தின் அலைகள் எழவும், விழவுமாக கரையற்று அங்குமிங்கும் அலைகழிக்கப்படுகின்றது. இதனால் வளர்வதும், தேய்வதுவும் எனக்கில்லை.

3. எல்லையிலா பெருங்கடலான என்னிடம் இந்த பிரபஞ்சம் ஒரு கற்பனையே. நான் அமைதிமயன், வடிவற்றவன், மற்றும் நிலையானவன் என்ற ஞானத்தினாலேயே யான் நிலைபெற்றுள்ளேன்.

4. தூய எல்லையற்ற ஆன்மாவிற்கு உலக பொருட்களின் விஷயங்களில்லை. அப்படிப்பட்ட தூய ஆன்மாவான நான் விருப்பு வெறுப்பு அற்று அமைதிமயமாக நிலை பெற்றுள்ளேன்.

5. நானோ ஞானமயமானவன். இந்த மாயா உலகில் எதனிடம் நான் விருப்பும், வெறுப்பும் கொள்வேன்?. இந்த உலகத்தை காட்சிப் பொருளாக ஒரு சாட்சியாக வேடிக்கைப் பார்ப்பேன்.

ஏழாம் அத்தியாயம் முற்றிற்று.

## அத்தியாயம் - 8

### அஷ்டாவக்ரர்:

1. எப்போது மனம் ஏதோவொன்றை விரும்புவதும் வெறுப்பதும், வருந்துவதும் மகிழ்வதும், தள்ளுவதும் கொள்ளுவதும், உவகையும் சீற்றமும் உண்டோ அப்போதே பந்தம்.

2. எப்போது மனம் ஏதோவொன்றை விரும்புவதும் வெறுப்பதும், வருந்துவதும் மகிழ்வதும், தள்ளுவதும் கொள்ளுவதும், உவகையும் சீற்றமும் உண்டாகாதோ அப்போதே முக்தி.

3. எப்போது மனம் சில விஷயங்களில் பற்றுறுமோ அப்போதே பந்தம். எப்போது சித்தம் எவ் விஷயத்திலும் பற்று விடுமோ அப்போதே வீடு.

4. நான்' அற்றிருந்தால் விடுதலை. 'நான்' என்பது உண்டானால் அதனோடு பந்தம் உருவாகின்றது. இதையறிந்து எதனையும் ஏற்பதோ, மறுப்பதோ வேண்டாம்.

எட்டாம் அத்தியாயம் முற்றிற்று.

# அத்தியாயம் - 9

## அஷ்டாவக்ரர்:

1. செய்வதும் செய்யாததும், விரும்புவதும் வெறுப்பதும் போன்ற இரட்டைகள் எப்பொழுது யாருக்காக முடிவுறும்?. கருதிப்பார்த்தால், எந்நாளும் விருப்பற்று சர்வத் தியாகமே சிறந்ததென்றிரு.

2. எங்கோ ஓர் புண்ணியவான் மட்டுமே உலகியலை உணர்ந்து வாழ்க்கை விருப்பத்தையும், போகத்தையும் அறிந்து எதன் மீதும் பற்று வைக்காமல் வீடுபேறு அடைகின்றான்.

3. எண்ணிப்பார்த்தால் பெரும்பாலானவர்களின் வாழ்க்கை மும்மடங்கு துயரங்களைக் கொண்டிருக்கின்றன. துறவியோ என்றும் ஆனந்தமாய் இருக்கின்றார். உண்மையல்லாத, நிலையற்ற இந்த உலகம் விலக்கப்படுவதற்கு மட்டுமே தகுதியுடையதாய் இருக்கின்றது.

4. எங்கே இரட்டைகளில்லையோ அங்கே காலமென்பதென்ன, வயதாவதென்ன? உலக ஆசைகளிலிருந்து விலகி இருத்தலே ஒருவருக்கு தன்னை அறியும் ஆனந்தமாகும்.

5. இந்த உலகத்தில் மஹரிஷிகளும், சாதுக்களும், யோகிகளும் வெவ்வேறு கொள்கைகளுடனே இருக்கின்ற யாவருடனும் ஒத்துப்போகின்றனர்.

6. இதை எண்ணிப்பார்த்தால் இந்தப் பிரபஞ்சம் விருப்பும், இருப்பும் அற்ற மாயை என்பதை உணர்ந்த அவர்களால் மட்டுமே அறிவிற்கு ஒத்திருக்க முடியாத நிலையிலும் அமைதியுடனிருக்க முடியும்.

7. உதாசீனம், சமத்துவம் என்ற யுக்திகளால் ஞான ஸ்வரூப அனுபவத்தை அடையச் செய்து இந்த உலக மாயையிலிருந்து விடுவிக்கச் செய்பவனே குரு ஆவான்.

8. பஞ்ச பூதங்களின் நிலை அறிந்து அவைகளை பூதங்களாகவே கண்டால் அக்கணமே நீ உண்மையில் உன்னை இதுவரை கட்டிவைத்துள்ள அறியாமை என்ற கட்டறுந்து ஸ்வரூப நிலை பெறுவாய்.

9. ஆசைகளே இந்த உலகை படைக்கின்றது. ஆசைகளை மறுப்பதையும், துறப்பதையும் நீ செய்தாயானால் நீ இப்போது நீயாக (ஆத்மனாக) இருக்கின்றாய்.

ஒன்பதாம் அத்தியாயம் முற்றிற்று.

## அத்தியாயம் - 10

### அஷ்டாவக்ரர்:

1. ஆசையை துற, அது ஓர் எதிரி. பொருள் விருப்பத்தை ஒழித்து பெற்ற வளமையைக் கைவிடு. நடு நிலைமையாய் இரு.

2. நண்பர்கள், நிலம், செல்வம், வீடு, மனைவி, மற்றும் சுற்றமும் எல்லாம் நான்கைந்து நாட்களே தோன்றி மறையும் கனவைப் போன்று கவனம் கொள்வாய்.

3. ஆசை இருக்குமிடத்தில் உலகம் இருக்கின்றது. விலகி நிற்பதில் உறுதிக்கொள். விருப்பம் ஒழித்து விடுதலை கொள். மகிழ்ச்சி அடைவாய்.

4. ஆசை கொள்வதினால் பந்தம் உண்டாகின்றது. ஆசை விடுதலே முக்தி. உலக ஆசைகளிலிருந்து விலகி இருத்தலே ஒருவர் தன்னை அறியும் ஆனந்தம் ஆகும்.

5. நீயே அறிவுமயமானவர், தூயவர். இந்த பிரபஞ்சமோ விழிப்பும், இருப்பும் அற்றது. அறியாமை என்பதும் மாயையே இதில் அறிந்து கொள்ள என்ன இருக்கின்றது?

6. பிறவிதோறும் ராஜ்யமும், மக்களும், மனைவிகளும், உடல்களும், சுகங்களும் வந்து போய் கொண்டிருப் பதெல்லாம் இழப்பதற்காகவே என்பதை அறிந்துகொள்.

7. நல்வினை, ஆனந்தம், தெய்வீகச் செயல்கள் எல்லாம் போதும்! இந்த உலகமென்னும் காட்டில் மனம் அமைதியை அறிய முடியாமல் தவிக்கின்றது.

8. எத்தனைப் பிறவிகள்தான் உடலாலும், மனதாலும், வாக்காலும் பாடுபடவில்லை? நீ ஆற்றுகின்ற காரியங்கள் அனைத்தும் களைப்பையும், துன்பத்தையும் தருபவைகளே அனைத்தையும் நிறுத்திக்கொள்ள இதுவே தருணம்.

பத்தாம் அத்தியாயம் முற்றிற்று.



# அத்தியாயம் - 11

## அஷ்டாவக்ரர்:

1. நிலைத்தன்மை இல்லாமை, மாற்றம் இவைகள் பொருட்களின் இயல்பு. இதனை உணர்ந்து நிலையான, அமைதியான, என்றும் இன்பமான ஒன்றை அறிய முயற்சி செய்!

2. ஆன்மாவே தான் மட்டும் தனித்து அனைத்தையும் செய்பவர். வேறொருவரும் இல்லை என அறிந்தவர் ஆசைகளையும், பற்றினையும் நீக்கி அமைதியுடன் நிலைத்திருப்பார்.

3. இன்பமும், துன்பமும் அவரவர் வினைப்படி வருவதும், போவதுமாக இருக்கும் என்பதை அறிந்தவர், அனைத்தையும் அடைந்த சுகத்துடன் ஒன்றையும் விரும்பவும் மாட்டார், வருந்தவும் மாட்டார்.

4. பிறப்பும், இறப்பும், இன்பமும், துன்பமும் அவரவர் விதியினுக்குத் தக வரும் என்பதை உணர்ந்து தன்னாலாவது ஒன்றுமில்லை எனக் கண்டு கொண்டவர் கவலையற்று களித்திருப்பார்.

5. எண்ணுகின்ற எண்ணங்களினாலேயே உலகத் துன்பங்களுக்கு காரணம் என அறிந்த ஒருவர் கவலையற்று அமைதியும், இன்பமும் கொண்டவனாவார்.

6. “நான்” உடல் அல்ல. இந்த உடல் என் உரிமைப் பொருள் அல்ல. நான் உணர்வாக மட்டுமே இருக்கின்றேன். இதை உறுதியாக அறிந்திருக்கும் ஒருவர் செய்து முடித்த அல்லது செய்யாமல் விட்ட காரியங்களைப் பற்றி கவலைப்படாமல் இருப்பார்.

7. பலவைகத் தன்மை கொண்டதும், வியப்புக்கு உரியதுமான இந்த பிரபஞ்சம் ஏதுமற்ற மாயை என்று உறுதியாக நம்புகின்ற ஒருவர் ஆசைகளற்று விழிப்புணர்வு கொள்கிறார். வெறுமையின் அமைதியில் வாழ்கிறார்.

பதினொன்றாம் அத்தியாயம் முற்றிற்று.



## அத்தியாயம் - 12

### ஜனகர்:

1. முதலில் செயல் பற்றிய பொறுமையின்மை, பிறகு மிதமிஞ்சிய பேச்சு, அதன் பிறகு தேவையற்ற சிந்தனைகள் இவற்றை உணர ஆரம்பித்தால் நான் நிலைபெறுவேன்.

2. ஓசையோ, மற்ற புலன் விஷயங்களிலோ என் கவனம் ஈர்க்கப்படாமல் கவனத்துடன், ஆன்மாவின் கூர்மையான தன் உணர்வில் மனம் விடுதலை பெற்று எதிலும் சிதறாததாய் ஒன்றில் நிலைத்ததாய் நான் இருக்கின்றேன்.

3. மாயையினால் மேலும் கவர்ச்சிகரமான தாக்கப்பட்டு சிதறிய மனதை ஒருமுகப்படுத்த அதிக முயற்சி தேவைப்படுகின்றது. இதை அறிந்தே நான் இங்கு இருக்கின்றேன்.

4. விலக்குவதற்கும் ஏற்றுக்கொள்வதற்கும், மகிழ்ச்சிக்கும் துக்கத்திற்கும் சம்பந்தமில்லாத சம நிலையில் பிரஹ்மமே! என்று இங்கு நான் இருக்கின்றேன்.

5. பிரம்மச்சரியம், இல்லறம், வானப்பிரஸ்தம் மற்றும் சன்னியாசம் என்ற வாழ்க்கையின் நான்கு படி நிலைகள் இன்றியும், தியானம்,

துறவு, மனத்தின் இலக்கு ஏதுமின்றி எண்ணத் தடுமாற்றங்கள் அற்று நான் என்றைக்கும் இங்கே இருக்கின்றேன்.

6. செயலினால் உண்டாகும் கர்ம வினை எவ்வாறு அறியாமையினால் உண்டாகின்றதோ, அவ்வாறே அதை துறத்தலும் என்ற இவ்வுண்மையை நன்கு உணர்ந்து நான் இங்கே இருக்கின்றேன்.

7. நினைக்கக்கூடாதவற்றை எல்லாம் நினைப்பது எண்ணங்களின் தவிர்க்க முடியாத தந்திரம் என்பதினால், நினைப்பொழிந்து பிரஹ்ம பாவனையில் நான் இங்கு இருக்கின்றேன்.

8. அவன் அருளாலே அவன் முயற்சியினால் இதை அவன் அடைந்திருக்கின்றான். அவன் அருள் பெற்றவனாய் அவனது இயல்பினால் அவன் அவ்வாறு இருக்கின்றான்.

பனிரெண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

**ஓம் தத் சத்!**

